உ
சிவமயம்

**अनामयस्तव:**

## தண்டி கவி இயற்றிய

# அநாமயஸ்தவம்



**தமிழ் உரை:**
**டாக்டர் ந. கங்காதரன்** எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
**ஸம்ஸ்க்ருத விரிவுரையாளர், சென்னை ஸர்வகலாசாலை**

உ
சிவமயம்

**अनामयस्तवः**

## தண்டி கவி இயற்றிய

# அநாமயஸ்தவம்

**तृष्णातन्त्रे मनसि तमसा दुर्दिने बन्धुवर्ती**
**मादृग्जन्तुः कथमधिकरोत्यैश्वरं ज्योतिरग्रयम् ।**
**वाचः स्फीता भगवति हरे सन्निकृष्टात्मरूपाः**
**स्तुत्यात्मानः स्वयमिव मुखादस्य मे निष्पतन्ति ॥ १ ॥**

**த்ருஷ்ணாதந்த்ரே மனஸி தமஸா து³ர்தி³னே ப³ந்து⁴வர்தீ**
**மாத்³ருக்³ஜந்து: கத²மதி⁴கரோத்யைஸ்வரம் ஜ்யோதிரக்³ரயம் ।**
**வாச: ஸ்பீ²தா ப⁴க³வதி ஹரே ஸன்னிக்ருஷ்டாத்மரூபா:**
**ஸ்துத்யாத்மான: ஸ்வயமிவ முகா²த³ஸ்ய மே நிஷ்பதந்தி ॥ 1 ॥**

(ஓ! ஹரனே!) ஆசையின் பெருக்கால் வளரும் இந்த ஸம்ஸாரத்தில் மனத்தில் அறிவின்மை சூழ்ந்திருக்கும் பொழுது பந்து மக்களிடம் ஈடுபாடு கொண்டுள்ள என் போன்றவர்கள் எவ்விதம் ஈச்வரனின் உயர்ந்த ஒளியைக் குறித்து கூற முடியும். பலவாறுன சொற்றெடர்கள் தாளுகவே சீரான துதியாக முகத்தினின்று வெளிப்படுக் கின்றன போலும்.

இப்பிரஞ்சத்திலுள்ள பொருள்கள் யாவும் ஈசுவரனின் வடிவாகும் சொல்லும் பொருளும் எப்பொழுதும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. ஒரு சொல் மொழிந்த வுடனேயே அதைக் குறிக்கும் எப்பொருளாகினும் ஈசுவரனின் வடிவாகையினுல் அது ஈசுவரனைக் குறித்துக் கூறுவதால் அது துதியாகிறது. பலவிதமான பந்த பாசங்களில் கட்டுண்ட உலக மக்கள் எவ்விதம் ஒளிரும் பரமனைக் குறித்து துதிக்க இயலும் என்று கூறி உலகின் பொருள்கள் சொற்கள் உட்பட பரமனின் வடிவாகக் கொண்டு அதனுல் தான் சீரற்ற சொற்களும் சீரான துதியாகிறது என்று கூறுகின்றுர்.

**वेधा विष्णुर्वरुणधनदौ वासवो जीवितेश-**
**च्चन्द्रादित्यौ वसव इति या देवता भिन्नकक्ष्याः ।**
**मन्ये तासामपि न भजते भारती ते स्वरूपं**
**स्थूले त्वंशे स्पृशति सदृशं तत्पुनर्मादृशोऽपि ॥ २ ॥**

**வேதா⁴ விஷ்ணுர்வருணத⁴னதௌ³ வாஸவோ ஜீவிதேஶ-**
**ச்சந்த்³ராதி³த்யௌ வஸவ இதி யா தே³வதா பி⁴ன்னகக்ஷ்யா꞉ ।**
**மன்யே தாஸாமபி ந ப⁴ஜதே பா⁴ரதீ தே ஸ்வரூபம்**
**ஸ்தூ²லே த்வம்ஶே ஸ்ப்ருஶதி ஸத்³ருஶம் தத்புனர்மாத்³ருஶோ(அ)பி ॥ 2 ॥**

நான்முகன், திருமால், வருணன், குபேரன், இந்திரன், யமன், சந்திரன், சூரியன், வஸுக்கள் முதலிய தேவர்கள் ஒருவருக்கொருவர் மாறுபட்ட கருத்துக்களை உடையவர்கள். அதனால் அவர்களுக்கும் உன்னுடைய நிர்க்குண ஸ்வரூபம் புலப்படுவதில்லை. ஆனால் ஸகுண ஸ்வரூபம் அவர்களுக்கு எப்படி புலப்படுகிறதோ அவ்விதமே எனக்கும் புலப்படுகிறது என்று நினைக்கின்றேன்.

நான்முகன் முதலானோராலும் பரமனின் நிர்க்குணஸ்வரூபம் வருணிக்க இயலாதது. ஏனெனில் ஒவ்வொருவரும் பலதரப்பட்ட கருத்துக்களை உடையவர்கள். அதனால் ஒருமைப்பட்ட சொல்லில் உன்னை அவர்களால் புகழ இயலாது. ஸகுண ஸ்வரூபத்தை எப்படி அவர்களால் வருணிக்க முடியுமோ அவ்வாறே என்னாலும் முடியும் என்று கூறுகிறார். பரமனின் ஸகுண ஸ்வரூபம் தானே யாவருக்கும் எளிதாக தெளிவாக புலப்படக் கூடியது. அதனால் நினைத்தற்கரிய அறிவதற்கரிய நிர்க்குண வடிவைத் தவிர்த்து ஸகுண வடிவை நானும் கூறுகின்றேன் என்கின்றார் கவி.

**तत्र स्थाणो स्तुतिरतिभग भक्तिरुचैर्मुखी चेत्**
**ग्राम्यः स्तोता भवति पुरुषः कशिदारण्यको वा ।**
**नो चेद्भक्तिस्त्वयि च यदि वा ब्रह्मविद्यास्त्वधीते**
**नानुध्येयस्तव पशुरसावात्मकर्मानभिज्ञः || ३ ||**

**தத்ர ஸ்தா²ணோ ஸ்துதிரதிப⁴க³ ப⁴க்திருசைர்முகீ² சேத்**
**க்³ராம்ய꞉ ஸ்தோதா ப⁴வதி புருஷ꞉ கஶிதா³ரண்யகோ வா ।**
**நோ சேத்³ப⁴க்திஸ்த்வயி ச யதி³ வா ப்³ரஹ்மவித்³யாஸ்த்வதீ⁴தே**
**நானுத்⁴யேயஸ்தவ பஶுரஸாவாத்மகர்மானபி⁴ஜ்ஞ꞉ ॥ 3 ॥**

அப்படி உன் ஸகுணஸ்வரூபத்தைத் துதிக்கத் துவங்கும் பொழுது ஹே தூண் வடிவானவரே! துதியானது உயர்ந்ததாகிறது. உன்னைச் சார்ந்த உயர்ந்த பக்தி இருக்குமாயின், துதிப்பவர் நாட்டில் வசிப்பவரோ அல்லது காட்டில் வசிப்பவரோ அல்லது வேறெங்காவது வசிப்பவராக இருப்பினும், அவர் செய்யும் துதியானது உயர்ந்ததாகின்றது. உம்மிடம் பக்தி இல்லையெனின், ஒருவன் பிரம்மத்தை உணர்த்தும் நூல்களைப் பயின்றும் கூட, மிருகத்தை போன்று விவேகமற்றவனாகின்றான்.

கண்ணப்பன் போன்றவரின் ஆழ்ந்த பக்தியே பரமனை அடைய எளிய வழி. பக்தியற்ற பல மகாகவிகளின் துதிகளினுலும் அவர் அடைய முடியாதவர். பக்தி இல்லாத ஒருவன் அரிய பல தத்துவ நூல்களைப் பயின்றுலும் பகுத்தறிவற்ற விலங்கினுக்கு ஒப்பாக ஆகின்றுன்.

**विश्व प्रादुर्भवति लभते त्वामधिष्ठायकं चे**
**नद्युत्पत्तिर्यदि जनयिता नास्ति चैतन्ययुक्तः ।**
**क्षित्यादीनां भव निजकलावत्तया जन्मवत्ता**
**सिध्यत्येवं सति भगवतस्सर्वलोकाधिपत्यम् ॥ ४ ॥**

**விஶ்வ ப்ராது³ர்ப⁴வதி லப⁴தே த்வாமதி⁴ஷ்டா²யகம் சே**
**நத்³யுத்பத்திர்யதி³ ஜனயிதா நாஸ்தி சைதன்யயுக்தః ।**
**க்ஷித்யாதீ³னாம் ப⁴வ நிஜகலாவத்தயா ஜன்மவத்தா**
**ஸித்⁴யத்யேவம் ஸதி ப⁴க³வதஸ்ஸர்வலோகாதி⁴பத்யம் ॥ 4 ॥**

ஓ! பவனே! இந்தப் பிரபஞ்சமானது உம்மை ஆதாரமாக அடையுமாகில் அது தோற்றம் பெறுகிறது. சேதனமான தோற்றுவிப்பவர் ஒருவரிலர் எனின் இந்த பிரபஞ்ச த்திற்குத் தோற்றமில்லை. இந்த புவி முதலான பொருள்களனைத்திற்கும் நீரே உள்ளிரு க்கும் பொருளாவீர். அப்படியிருப்பதினுல் உமக்கே அனைத்துலகிற்கும் ஆதிபத்யம் என்பது உறுதியாகின்றது.

பரமனை ஆதாரமாகப் பெற்ற பிரபஞ்சம் ஒரு தோற்றத்தைப் பெருகிறது. இல்லையென்றுல் இதற்குத் தோற்றம் எப்படி? உலகிலுள்ள பொருளனைத்திற்கும் உள்ளிருந்து ஆட்டுவிப்பவர் பரமனே அன்றோ. அதனுல் தான் உலகப் பொருளனைத் தையும் ஆட்டி வைப்பவர் பரமன் என்றுகிறது.

**भोग्यामाहुः प्रकृतिमृषयश्चेतनाशक्तिशून्यां**
**भोक्ता चैनां परिणमयितुं बुद्धिवर्ती समर्थः ।**
**भोगोऽप्यस्मिन् भवति मिथुने पुष्कलस्तत्र हेतु-**
**नीलग्रीव त्वमसि भुवनस्थापनासूत्रधारः ॥ ५ ॥**

**போ⁴க்³யாமாஹுः ப்ரக்ருதிம்ருஷயஶ்சேதநாஶக்திஶூன்யாம்**
**போ⁴க்தா சைனும் பரிணமயிதும் பு³த்³தி⁴வர்தீ ஸமர்த²ः ।**
**போ⁴கோ³(அ)ப்யஸ்மின் ப⁴வதி மிது²னே புஷ்கலஸ்தத்ர ஹேது-**
**நீலக்³ரீவ த்வமஸி பு⁴வனஸ்தா²பனுஸூத்ரதா⁴ரः ॥ 5 ॥**

முனிவர்கள் உயிரற்ற மூலப்பொருளான ப்ரக்ருதியை நுகரும் பொருளெனக் கூறுகின்றனர். ப்ரக்ருதியினின்றும் தோன்றிய புத்தி அல்லது மஹத்தத்துவத்தை உடைய ஆத்மாவானது இந்த ப்ரக்ருதியை ஸம்ஸாரமாக மாற்ற முடிகிறது. இந்த சேர்க்கையில் போகமும் முழுமையாக ஏற்படுகிறது. ஓ! நீலக்ரீவ (நீல வண்ண கழுத்தை உடையவனே)! நீர்தான் இந்த பிரபஞ்சத்தின் துவக்கத்தின் ஸூத்ரதாரர் அல்லவா!

ப்ரக்ருதியை நடிகையாகவும், புருஷனை (ஸாங்க்ய) பொதுஜனமாகவும், பரமனை ஸூத்ரதாரன் எனப்படும் நாடகத்தின் துவக்கத்தில் வரும் அரங்கத்தின் ஊக்குவிப்பவராகவும் கவி கூறியுள்ளார். ஒரு நாடகத்தில் ஸூத்ரதாரனின் பங்கு நடிக நடிகையரை மேற்பார்வையிட்டு நாடகத்தை நடத்துவதே. அம்மாதிரியான பரமன் இந்த உயிரற்ற இயற்கைப் பொருள்களையும் இவைகளை நுகரும் ஆத்மாவையும் இயங்க வைக்கும் ஸூத்ரதாரன் பரமனே.

**चारूद्रेके रजसि जगतां जन्म सत्त्वे प्रकृष्टे**
**यात्रां भूयस्तमसि बहुले बिभ्रतः संहतिं च ।**
**ब्रह्माद्येतत्प्रकृतिगहनं स्तम्बपर्यन्तमासीत्**
**क्रीडावस्तु त्रिनयन मनोवृत्तिमात्रानुगं ते ॥ ६ ॥**

**சாருத்³ரேகே ரஜஸி ஜக³தாம் ஜன்ம ஸச்வே ப்ரக்ருஷ்டே**
**யாத்ராம் பூ⁴யஸ்தமஸி ப³ஹுலே பி³ப்⁴ரத꞉ ஸம்ஹதி ச ।**
**ப்³ரஹ்மாத்³யேதத்ப்ரக்ருதிக³ஹனம் ஸ்தம்ப³பர்யந்தமாஸீத்**
**க்ரீடா³வஸ்து த்ரிநயன மனோவ்ருத்திமாத்ரானுக³ம் தே ॥ 6 ॥**

ஓ! முக்கண்ணனே! ரஜோகுணம் பெருகி இருக்கும் பொழுது இந்த உலகம் தோன்றுகிறது. ஸத்வ குணம் நிரம்பி இருக்கும்பொழுது அது போற்றி வளர்க்கப்படுகிறது. தமோ குணம் நிரம்பி இருக்கையில் அது அழிவடைகிறது. இம்மாதிரி மீண்டும் மீண்டும் ஏற்படும் காட்டை போன்ற நான்முகன் முதலான இந்தப் பிரபஞ்சமானது உம்முடைய மனோவ்ருத்தியின் விளையாட்டுப் பொருளேயாகும்.

நான்முகன், திருமால், சிவன் என்று மூவிதமான பரமனின் தோற்றம் அவரிடம் முக்குணங்களான ஸத்துவ, இரஜ, தமோ குணங்களில் யாதொன்று மேம்பட்டு இருக்கிறதோ அதைப் பொருத்ததாகும். இம்மாதிரி மீண்டும் மீண்டும் உலகமும் அதன் பொருள்கள் யாவையும் தோன்றவும், வளரவும், அழியவும் செய்தல் அந்த பரமனுக்கு இவை யாவும் ஒரு விளையாட்டேயாகும்.

**कृत्तिचित्र निवस नपदे कल्पिता पौण्डरीकौ**
**वासागारं पितृवनभुवो वाहनं कश्चिदुक्षा ।**
**एवं प्राहुः प्रलघुहृदया यद्यपि स्वार्थपोषं**
**त्वां प्रत्येकं ध्वनति भगवन्नीश इत्येष शब्दः ॥ ७ ॥**

**க்ருத்திசித்ர நிவஸ நபதே³ கல்பிதா பௌண்ட³ரீகௌ**
**வாஸாகா³ரம் பித்ருவனபு⁴வோ வாஹனம் கஶ்சிது³க்ஷா ।**
**ஏவம் ப்ராஹு꞉ ப்ரலகு⁴ஹ்ருத³யா யத்³யபி ஸ்வார்த²போஷம்**
**த்வாம் ப்ரத்யேகம் த்⁴வனதி ப⁴க³வன்னீஶ இத்யேஷ ஶப்³த³꞉ ॥ 7 ॥**

ஓ! பெரும் பேறுபெற்றவனே! பல நிறங்களையுடைய புலித்தோல் உமது உடை யாகும். மயானமே நீர் வசிக்கும் இடம். ஒரு காளைமாடே உம்முடைய வாஹனம். மந்த புத்தியுடையவர்கள் உம்மைப் பற்றி இவ்விதமாகக் கூறிய போதும், 'ஈசன்' என்னும் சொல் தானாகவே உங்களுக்குள்ள ஆதிபத்யத்தைக் குறிக்கிறது.

சிவனாரின் உடை, உறைவிடம், அவரது வாகனம் இவற்றைப் பற்றி இழிவாகப் பாமரர் கூறிய போதும் அவரைக் குறிக்கும் 'ஈசன்' என்னும் சொல்தானாகவே அவருக்கு உடைய ஆதிபத்தியத்தின் சிறப்பை விளக்குகிறது.

ஈசானஸ் ஸர்வ வித்யானாம் ஈச்வரஸ்ஸர்வ பூதானாம் என்றல்லவா மறையும் அவரது பெருமையைக் குறித்துக் கூறுகிறது.

**क्लृप्ताकल्पः किमयमशिवैर स्थिमुख्यैः पदार्थैः**
**कस्मादस्य स्तनकलशयोर्भारनम्रा भवानी ।**
**पाणौ खण्डः परशुरिदमप्यक्षसूत्रं किमस्ये-**
**त्याचक्षाणो हर कृतधियामस्तु हास्यैकवेद्यः ॥ ८ ॥**

**க்ல்ருப்தாகல்ப꞉ கிமயமஶிவைர ஸ்தி²முக்²யை꞉ பதா³ர்தை²꞉**
**கஸ்மாத³ஸ்ய ஸ்தனகலஶயோர்பா⁴ரனம்ரா ப⁴வானீ ।**
**பாணௌ க²ண்ட³꞉ பரஶுரித³மப்யக்ஷஸூத்ரம் கிமஸ்யே-**
**த்யாசக்ஷாணோ ஹர க்ருததி⁴யாமஸ்து ஹாஸ்யைகவேத்³ய꞉ ॥ 8 ॥**

இந்தப் பரமேச்வரன் அமங்களமான எலும்பு முதலானவைகளால் எதற்காக அலங்காரம் செய்து கொண்டிருக்கின்றார்? குடம் போன்ற முலைகளின் பாரத்தினால் சாய்ந்துள்ள பார்வதி எக்காரணத்தினால் உம்மை அடைந்துள்ளாள்? கையில் பிளவு பட்ட கோடாலி எதற்காக? ஜபமாலை எதற்காக? என்று கூறும் திடசித்தமுடையவர் களால் பரிஹாசமாகவே நீர் அறியப்பட்டாலும் அது உம்மை எவ்விதமும் பாதிக்காது.

சிவனுர் மனம் மகிழ்ந்து நடம் புரியும் இடம் மயானமாகையினுல் அவரது சிறந்த அணிகலன் மயானத்தில் குவிந்து கிடக்கும் எலும்புகள். இப்படிப்பட்ட உம்மை மென்மையான உடஂல உடைய அன்ஂன பார்வதி எதற்காக அடைந்தாள்? உம் கையில் பிளவுபட்ட கோடாலியும் ஜபமாஂலயும் எதற்காக என்று பலவாறுக உம்மைக் குறித்து ஏளனமாக பலரால் கூறப்பட்டாலும் இவை யாவும் உம்மைச் சிறிதளவும் பாதிக்காது.

**यत्कापालं व्रतमपि महद्ध्रुष्टमेकान्तघोरं**
**मुक्तेरध्वा स पुनरमलः पावनः किं न जातः ।**
**दाक्षायण्याः प्रियतमतया वर्त्तते योगमाया**
**साप्याधत्ते मिथुनचरितं वृद्धिमूलं प्रजानाम् ॥ ९ ॥**

**யத்காபாலம் வ்ரதமபி மஹத்³த்⁴ருஷ்டமேகாந்தகோ⁴ரம்**
**முக்தேரத்⁴வா ஸ புனரமல꞉ பாவன꞉ கிம் ந ஜாத꞉ ।**
**தா³க்ஷாயண்யா꞉ ப்ரியதமதயா வர்ததே யோக³மாயா**
**ஸாப்யாத⁴த்தே மிது²னசரிதம் வ்ருத்³தி⁴மூலம் ப்ரஜானும் ॥ 9 ॥**

பெரும் பேறு பெற்றவனே! எந்தக்காரணத்தால் காபால வ்ரதமும் மிகச் சிறந்த தாகக் காணப்படுகிறதோ அதுவும் முக்திக்கு சிறந்த வழியாகும். அவ்வழி மிகவும் புனிதமாக ஆகவில்ஂலயா என்ன? மிகவும் பிரியமான தாக்ஷாயணியின் யோகமாயை இருக்கிறதே அது மக்களின் ஸந்ததி பெருகுவதற்கு தாம்பத்யத்தைப் போஷிக்கின்றது.

சோம்பேறிகளால் கடைப்பிடிக்க முடியாத மிகவும் அரிய மண்டை ஓட்டை அணிதல் என்னும் விரதமும் மிகப் புனிதமாக ஆக வில்ஂலயா என்ன? உண்மையில் பரமன் அதை அணிகலன்களாக அணியவில்ஂல. அதை ஒரு நோன்பாகவே அவர் செய்கின்றுர். மேலும் அன்ஂன பார்வதியும் மாயையினுல் அவருடன் சேர்ந்திருப்பது போன்று தோன்றுகின்றுள். முன் செய்யுளின் கருத்தின் கண் தோன்றும் ஐயமகல இங்கு கவி இக்கருத்தை கூறுகின்றுர்.

**कश्चिन्मर्त्यः क्रतुक्रुशतनुर्नीलकण्ठ त्वया चेत्**
**दृष्टः स्निग्धं स पुनरमरस्त्री- भुजग्राह्यकण्ठः ।**
**अप्यारूढस्सुरपरिवृतं स्थानमाखण्डलीयं**
**त्वं चेत्क्रुद्धस्स पतति निरालम्बनो ध्वान्तजाले ॥ १० ॥**

**கஶ்சின்மத்ய꞉ க்ரதுக்ருஶதனுர்நீலகண்ட² த்வயா சேத்**
**த்³ருஷ்ட꞉ ஸ்னிக்³த⁴ம் ஸ புனரமரஸ்த்ரீ- பு⁴ஜக்³ராஹ்யகண்ட²꞉ ।**
**அப்யாரூட⁴ஸ்ஸுரபரிவ்ருதம் ஸ்தா²னமாக²ண்ட³லீயம்**
**த்வம் சேத்க்ருத்³த⁴ஸ்ஸ பததி நிராலம்ப³னோ த்⁴வாந்தஜாலே ॥ 10 ॥**

நீலகண்டனே! எவனொருவன் யாகங்கள் செய்து உடல் மெலிந்து உம்முடைய கடாக்ஷத்தைப் பெறுகின்றானோ அவன் தேவமடந்தையர்களின் கைகளால் தழுவப்பட்ட கழுத்தை உடையவனாகவும் தேவர்கள் சூழ இந்திர லோகத்தில் இடத்தையும் பெறு பவனாகவும் ஆகின்றான். நீங்கள் சினந்தால் அவன் ஆதாரமற்று பெரும் நகரத்தில் விழுகின்றான்.

பரமனைப் போற்றும் இந்திரன் பெரும் பேற்றையும் பரமனை மதியாத தக்ஷன் பெற்ற துயரையும் கவி எடுத்துக் கூறுகிறார். பரமனைப் பணிபவன் அவன் கடாக்ஷத்தைப் பெற்று பெரும் பேற்றைப் பெறுகின்றான். பரமனின் சினத்திற்குப் பாத்திரமானவனோ பெரும் நரகத்தில் போய் விழுகின்றான். சிவனை மதியாத தக்ஷன் ஏற்பாடு செய்த யாகம் யாவையும் அழிக்கப்பட்டு தக்ஷனும் பெருந்துயருக்கு ஆளானதை கருத்தில் கொண்டு கவி சொல்லாமல் குறிப்பிடுகிறார்.

**शश्वद्बालयं शरवणभवं षण्मुखं द्वादशाक्षं**
**तेजो यत्ते कनकनलिनीपद्मपत्रावदातम् ।**
**विस्मार्यन्ते सुरयुवतयस्तेन सेन्द्रावरोधाः**
**दैत्येन्द्राणाममरजयिनां बन्धनागारवासम् ॥ ११ ॥**

**ஶஶ்வத்³வாலயம் ஶரவணப⁴வம் ஷண்முக²ம் த்³வாத³ஶாக்ஷம்**
**தேஜோ யத்தே கனகநலினீபத்³மபத்ராவதா³தம் ।**
**விஸ்மார்யந்தே ஸுரயுவதயஸ்தேன ஸேந்த்³ராவரோதா⁴:**
**தை³த்யேந்த்³ராணாமமரஜயினாம் ப³ந்த⁴நாகா³ரவாஸம் ॥ 11 ॥**

எப்பொழுதும் இளமைப் பருவமாயும், நாணற் புதரில் தோன்றியதும், ஆறு முகங்களும் பன்னிரு கைகளை உடையதும் பொற்றாமரையின் இலையைப் போன்று தெளிவானதுமான உன்னுடைய ஒளிரும் உருவினால் முன்னர் தேவர்களை வென்ற தாரகன் முதலான அரக்கர்களால் சிறையில் வைக்கப்பட்டதை இந்திரனின் அந்தப்புரப் பெண்டிருடன் தேவ மடந்தையரும் மறக்கின்றனர்.

பரமனின் ஒளி நிறைந்த ஆறுமுக வடிவைக்காணும் தேவ மடந்தையர் தாங் கள் முன்னர் தாரகன் முதலான அரக்கர்களால் சிறையில் வைக்கப் பெற்று இன்னலு ற்றதை மறக்கின்றனர்.

வீரபத்திரனைப் போன்று பரமனின் குமார உருவும் பரமனின் லீலா விநோத மென்று பக்தர்களின் நம்பிக்கை.

**वेगाकृष्टग्रहरविशशि व्यश्नुवानं दिगन्तान्**
**न्यक्कुर्वाणं प्रलयपयसामूर्मिभङ्गावलेपम् ।**
**मुक्तागौरं हर तव जटाबन्धसंस्पर्श सद्यो**
**जज्ञे चूडाकुसुम सुभगं वारि भागीरथीयम् ॥ १२ ॥**

**வேகா³க்ருஷ்டக்³ரஹரவிஶஶி வ்யஶ்னுவானம் தி³க³ந்தான்**
**ந்யக்குர்வாணம் ப்ரலயபயஸாமூர்மிப⁴ங்கா³வலேபம் ।**
**முக்தாகௌ³ரம் ஹர தவ ஜடாப³ந்த⁴ஸம்ஸ்பர்ஶ ஸத்³யோ**
**ஜஜ்ஞே சூடா³குஸும ஸுப⁴க³ம் வாரி பா⁴கீ³ரதீ²யம் ॥ 12 ॥**

ஓ! ஹரனே! சூரியன், சந்திரன் முதலான கோள்களை வேகமாக அடித்துக் செல்வதும், திசை எங்கிலும் பரவுவதும் பிரளய கால நீர் பெருக்கின் அலைச் சுழல் களின் செருக்கை அடக்கும் முத்தைப் போன்று வெண்மையான இந்த கங்கையின் நீரானது பரமனின் சடையை அடைந்தவுடன் சடையில் மல்லிகை மலரினை ஒத்த அழகு உடைத்தாயிற்று.

ஆகாச கங்கையானது ஆகாயத்தைத் தன் சடை முடியாகக் கொண்ட பரமனின் தலைமீது பிரவஹிக்கும் பொழுது வெண் முத்தை போன்று உள்ளன அதன் நீரின் நுரைகள் மல்லிகை மலரினை ஒத்து ஒளிருகின்றன. கோள்களை எல்லாம் அடித்துச் செல்வதும், நாற்றிசையிலும் பரவுவதுமான பிரளய கால வெள்ளப் பெருக்கின் செருக்கை அடக்கி அதை நாணமடையச் செய்கிறது கங்கையின் நீர். அப்படிப்பட்ட கங்கை நீரின் வெண் நுரைகளை பரமனின் சடைமுடியில் அணியாகக் காண்கின்றார் கவி.

**कल्माषस्ते मरकतशिलाभङ्गकान्तिर्न कण्ठे**
**न व्याचष्टे भुवनविषयां त्वत्प्रसादप्रवृत्तिम् ।**
**वारां गर्भस्स हि विषमयो मन्दरक्षोभजन्मा**
**नैवं रुद्धो यदि न भवति स्थावरं जङ्गमं वा ॥ १३ ॥**

**கல்மாஷஸ்தே மரகதஶிலாப⁴ங்க³காந்திர்ன கண்டே²**
**ந வ்யாசஷ்டே பு⁴வனவிஷயாம் த்வத்ப்ரஸாத³ப்ரவ்ருத்திம் ।**
**வாராம் க³ர்ப⁴ஸ்ஸ ஹி விஷமயோ மந்த³ரக்ஷோப⁴ஜன்மா**
**நைவம் ருத்³தோ⁴ யதி³ ந ப⁴வதி ஸ்தா²வரம் ஜங்க³மம் வா ॥ 13 ॥**

மரகதமணி என்னும் பச்சைகல் துண்டுகளின் ஒளியையொத்து உன் கழுத்தில் ஒளிரும் கருமை உலகிலுள்ள படைப்புகளிடம் உமக்குள்ள அன்புப் பெருக்கை வெளிப்படுத்துவதன்றோ! மந்திர மலையைக் கொண்டு கடைந்த பொழுது நீரினின்றும்

தோன்றிய 'காலகூடம்' என்னும் நஞ்சு இவ்விதமாக தடுக்கப்படவில்லை எனில் உயிர் வாழினங்கள் யாவும் இருந்திருக்காது அல்லவா?

பாற்கடலைக் கடைந்து தோன்றிய காலகூடம் என்னும் நஞ்சு சிவனாரின் கழுத்தில் பச்சைக் கற்களின் ஒளியுடன் ஒளிருகின்றது. அது மட்டுமா! அது உலகிலுள்ள உயிர் வாழினங்களிடம் பரமனுக்கு உள்ள மட்டற்ற அன்பை புலப்படுத்துகிறது. ஏனெனில் கடையும்பொழுது தோன்றிய நஞ்சை பரமன் எடுத்து அருந்தவில்லை என்றால் அக்கொடிய விஷத்தினால் எந்த உயிர் தான் பிழைத்திருக்கும்!

**सन्धायास्त्रं धनुषि नियमोनमाथि संमोहनाख्यं**
**पार्श्वे तिष्ठन् गिरिश ददृशे पञ्चवाणो मुहूर्तम् ।**
**तस्मादूर्ध्वं दहनपरिधौ रोपदृष्टः प्रसूते**
**रक्ताशोकः स्तबकित इव प्रान्तधूमद्विरेफः ॥ १४ ॥**

**ஸந்தா⁴யாஸ்த்ரம் த⁴னுஷி நியமோனமாதி² ஸம்மோஹனாக்²யம்**
**பார்ஶ்வே திஷ்ட²ன் கி³ரிஶ த³த்³ருஶே பஞ்சவாணோ முஹூ³ர்தம் ।**
**தஸ்மாதூ³ர்த்⁴வ த³ஹனபரிதௌ⁴ ரோபத்³ருஷ்ட: ப்ரஸூதே**
**ரக்தாஶோக: ஸ்தப³கித இவ ப்ராந்ததூ⁴மத்³விரேப²: ॥ 14 ॥**

ஹே! கிரீச! தியானத்தை குலைக்கும் ஸம்மோஹனம் என்னும் அஸ்திரத்தை வில்லில் ஏற்றி மன்மதன் (உம்) அருகில் ஒருக்கணம் நின்றதும் அதற்குப் பின்னர் (உம்) சிவந்த கண்ணினின்றும் வெளிப்பட்ட நெருப்பு பரவி நிற்கவும் அருகில் உள்ள புகையே வண்டுகள் போல உடையதாய் சிவந்த அசோக மரமானது மலர்ந்த மலர்களையுடையதாய் இருந்தது.

காமனின் ஐந்து பாணங்களில் ஒன்றானது ஸம்மோஹனம் என்பது. அதை வில்லில் ஏற்றி அருகில் காமன் நிற்கின்றான். ஒருக்கணம் கழிந்த பின் பரமன் தன் ஒன்றுபட்ட தியானம் கலைந்ததால் சினந்து தன் நெற்றிக் கண்ணைத் திறக்கின்றார். சினத்தால் அது சிவந்து காணப்படுகிறது. அச்சமயம் அருகில் உள்ள புகையை வண்டாகக் கொண்டு சிவந்த கண்ணினின்று தோன்றிய சிவந்த நெருப்பையும் ஒன்றிணைத்து கவி ஒரு கற்பனைத் தோற்றத்தைக் காண்கின்றார். அசோக வனத்தின் சிவந்த மலர்கள் மலர்ந்ததாகக் கூறுகிறார்.

**लङ्कानाथं लवणजलधिस्थूलवेलोर्मिदीर्घैः**
**कैलासं ते निलयनगिरिं बाहुभिः कम्पयन्तम् ।**
**आक्रोशद्भिर्वमितरुधिरैराननैराप्लुताक्षै-**
**रापातालादनयदलसाबद्धगुष्ठकर्म ॥ १५ ॥**

**லங்காநாத²ம் லவணஜலதி⁴ஸ்தூ²லவேலோர்மிதீ³ர்க்⁴கை⁴:**
**கைலாஸம் தே நிலயனகி³ரிம் பா³ஹுபி⁴: கம்பயந்தம் ।**
**ஆக்ரோஶத்³பி⁴ர்வமிதருதி⁴ரைரானனைராப்லுதாக்ஷை-**
**ராபாதாலாத³னயத³லஸாப³த்³த⁴கு³ஷ்ட²கர்ம ॥ 15 ॥**

உவரியின் கடற்கரையும் அதன் அலைகளும் போன்று நீண்ட கைகளால் உம்முடைய வசிக்குமிடமான கைலாய மலையை அசைக்கும் இராவணனை கூக்குரலிடுவதும் இரத்தம் கக்குவதுமான முகங்களுடனும் நீர் தளும்பும் கண்களுடனும் பாதாளம் வரையிலும் விளையாட்டாகச் செயல்படும் உங்கள் கட்டைவிரல் பாதாளம் வரையிலும் கொண்டு சேர்த்தது.

தன் நீண்ட கைகளால் கைலாய மலையை ஆட்டி அசைவித்தான் இராவணன். அன்னை பார்வதி அஞ்சி நடுங்கினாள். அப்பொழுது விளையாட்டாகச் சிவனார் தன் கால் கட்டை விரலால் நசுக்க அவன் முகங்களினின்றும் நீர் பெருகிய வண்ணம் பாதாளம் வரை கொண்டு செல்லப்பட்டான். சிவனாரின் லீலா விநோதமான செயலும் பெரும் சக்தி வாய்ந்தது என்று கூறுகிறார்.

**ऐश्वर्यं ते व्यवृणुत पतन्नेकमूर्धावशेषः**
**पादद्वन्द्वे दशमुख शिरः पुण्डरीकोपहारः ।**
**येनैवासावधिगततपा राक्षसश्रीविधेय-**
**च्चक्रे देवोऽसुरपरिषदो लोकपालैकशत्रुः ॥ १६ ॥**

**ஐஶ்வர்யம் தே வ்யவ்ருணுத பதன்னேகமூர்தா⁴வஶேஷ:**
**பாத³த்³வந்த்³வே த³ஶமுக² ஶிர: புண்ட³ரீகோபஹார: ।**
**யேனைவாஸாவதி⁴க³ததபா ராக்ஷஸஶ்ரீவிதே⁴ய-**
**ச்சக்ரே தே³வோ(அ)ஸுரபரிஷதோ³ லோகபாலைகஶத்ரு: ॥ 16 ॥**

இராவணன் தன் தலையாகிற தாமரை மலர்களால் உம்மை வழிபடுகையில் ஒரே ஒரு தலை எஞ்சியுள்ள பொழுது உம் பாதத்தில் விழுந்துள்ள அவை உம்முடைய திறமையை வெளிப்படுத்துகின்றன. இந்த வழிபாட்டினாலேயே இராவணனும் தன் தவத்தினால் பெற்ற அரக்கப் பேரரசுடன் அரக்கர் கூட்டத்தின் தலைவனாக ஆகி இந்திரன் முதலானவர்களுக்கு ஒரு முக்கியமான பகைவன் ஆனான் அல்லவா?

கடும் தவம் புரிந்து தன் தலைகளையே மலர்களுக்கு பதிலாக பரமனின் காலடிகளில் ஸமர்ப்பணம் செய்யவும், இராவணனின் வழிபாட்டினால் மனம் மகிழ்ந்த பரமனும் அவனது ஒரே ஒரு தலை எஞ்சியிருக்கும் பொழுது அவன் முன் தோன்றி அவனுக்கு வரம் அளித்ததாக புராண வரலாறு. அந்த வரத்தின் மேன்மையினால்

அவன் அரக்கர் குலக்திற்குத் தலைவனாக ஆகி இந்திரன் முதலான தேவர்களுக்கெல்லாம் முக்கிய பகைவனாக ஆனான். பரமன் தன் அடி பணிபவர் அனைவருக்கும் அருள் செய்பவர் என்பதற்கு இது ஒரு சான்றல்லவோ?

**भक्तिर्बाणासुरमपि भवत्पादपद्मं स्पृशन्तं**
**स्थानं चन्द्राभरण गमयामास लोकस्य मूर्ध्नि ।**
**न ह्यस्यापि भ्रुकुटिनयनादग्निदंष्ट्राकरालं**
**द्रष्टुं कश्चिद्वदनमशकद्देवदैत्येश्वरेषु ॥ १७ ॥**

**ப⁴க்திர்பா³ணாஸுரமபி ப⁴வத்பாத³பத்³மம் ஸ்ப்ருஶந்தம்**
**ஸ்தா²னம் சந்த்³ராப⁴ரண க³மயாமாஸ லோகஸ்ய மூர்த்⁴னி ।**
**ந ஹ்யஸ்யாபி ப்⁴ருகுடிநயநாத³க்³னித³ம்ஷ்ட்ராகராலம்**
**த்³ரஷ்டும் கஶ்சித்³வத³னமஶகத்³தே³வதை³த்யேஶ்வரேஷு ॥ 17 ॥**

மதியை அணிந்தவனே! உம்முடைய அடித்தாமரையைப் பணியும் பாணாஸுரனையும் அவனுடைய பக்தியின் காரணமாக உலகத்தில் முதலிடம் பெறச் செய்தாயல்லவா? உலகத்தில் முதலிடம் பெறச் செய்தாயல்லவா! அந்த பாணாஸுரனுடைய புருவங்களின் சுருக்கமான கண்ணின் காரணமாய் நெருப்பாலான அச்சம் தரும் பற்களையுடைய முகமானது தேவாஸுரர்களில் எவர் ஒருவராலும் பார்க்க முடியவில்லை அல்லவா!

பக்தியின் காரணமாக தன் அடி பணிந்த பாணாஸுரனை முதலிடம் பெறச் செய்தான் பரமன். மேலும், சினந்த பாணாஸுரன் தன் புருவங்களை சுருக்கும் பொழுது அந்த சேர்க்கையும் ஒரு கண் எனக்கொண்டு அவனுடைய நெருப்பை ஒத்த பற்களையுடைய அவனது அஞ்சத்தக்க முகத்தை எவராலும் துணிவாக நேருக்கு நேர் நின்று நோக்க முடியவில்லை அல்லவா என்று கவி கற்பனை செய்கிறார். தன்னிடம் பக்தி செய்யும் அனைவருக்கும் பரமன் அருள் செய்கின்றார்.

**पादन्यासान्नमति वसुधा पन्नगस्कन्धलग्ना**
**बाहूत्क्षेपाद्ग्रहणयुतं घूर्णते मेघबृन्दम् ।**
**उत्सार्यन्ते क्षणमिव दिशो हुङ्कृतेनातिमात्रं**
**भिन्नावस्थं भवति भुवनं त्वय्युपक्रान्तनृत्ते ॥ १८ ॥**

**பாத³ந்யாஸான்னமதி வஸுதா⁴ பன்னக³ஸ்கந்த⁴லக்³னா**
**பா³ஹூத்க்ஷேபாத்³க்³ரஹணயுதம் கூ⁴ர்ணதே மேக⁴ப்³ருந்த³ம் ।**
**உத்ஸார்யந்தே க்ஷணமிவ தி³ஶோ ஹுங்க்ருதேனாதிமாத்ரம்**
**பி⁴ன்னாவஸ்த²ம் ப⁴வதி பு⁴வனம் த்வய்யுபக்ராந்தந்ருத்தே ॥ 18 ॥**

நீர் நடனம் செய்யும் பொழுது உலகிலுள்ள பொருள்கள் யாவும் பலவிதமான மாறுதல்களை அடைகின்றன. பாம்பின் தலை மீது நிலைத்த இந்த புவியானது உங்கள் காலடி வைக்கப்பட்டதினுல் வணங்குகிறது. கோள்களுடன் கூடிய மேகங்களின் கூட்ட ங்கள் உங்கள் கைகளின் அசைவினுல் சுழல்கின்றன: நடனம் அளவுக்கு மிஞ்சிப் போகும் பொழுது உம்முடைய ஹுங்கார ஒலியினுல் திசைகளனைத்தும் கண நேரம் தொலைவில் அகற்றப்பட்டவை போல உள்ளன.

ஆதிசேஷன் தன் தலைமீது இப்புவியைத் தாங்கி நிற்பதென்றேரு நம்பிக்கை. நடமிடும் பரமனின் காலடி புவி மூது வைக்கப்பட அதன் பாரத்தினுல் சாய்கிறது. அதையே பரமனடி பணிவதாகக் கூறுகிறுர் கவி. அவருடைய கைகள் அசைய அதன் வேகத்தினுல் கோள்களும் மேகக் கூட்டங்களும் சுழல்கின்றன. நடனம் உச்ச கட்ட த்தை அடைந்து அளவு கடந்து போகும் பொழுது அவரது ஹுங்கார ஒலியினுல் திசைகள் அனைத்தும் எட்ட அகன்றவை போல உள்ளன.

**नोर्ध्वं गम्यं सरसिजभुवो नाप्यधः शार्ङ्गपाणे-**
**रासीदन्तस्तव हुतवहस्तम्भमूर्त्या स्थितस्य ।**
**भूयस्ताभ्यामुपरि लघुना विस्मयेन स्तुवद्भ्यां**
**कण्ठेकालं कपिलनयनं रूपमाविर्बभूव ॥ १९ ॥**

**நோர்த்⁴வம் க³ம்யம் ஸரஸிஜபு⁴வோ நாப்யத⁴: ஶார்ங்க³பாணே-**
**ராஸீத³ந்தஸ்தவ ஹுதவஹஸ்தம்ப⁴மூர்த்யா ஸ்தி²தஸ்ய ।**
**பூ⁴யஸ்தாப்⁴யாமுபரி லகு⁴னா விஸ்மயேன ஸ்துவத்³ப⁴யாம்**
**கண்டே²காலம் கபிலநயனம் ரூபமாவிர்ப³பூ⁴வ ॥ 19 ॥**

அவர்களுக்கு (மாலயன் இருவருக்கும்) இடையே அனற் பிழம்பாக நெடுந்தண் டமான உருவாக நின்ற உம்முடைய முடியை நான்முகனும், அடியைத் திருமாலும் அடைய முடியவில்லை. பின்னர் தம் தம் சிறுமையையும் உணர்ந்து வியப்பினுல் உம்மைத் துதிப்பவர் முன் உம்முடைய கருத்த கழுத்தும் பழுப்பு செந்நிறமான கண்ணுமுடைய உருவம் தோன்றியது.

தமக்குள் தாம் தான் பெரியவர் என்று கூறி வாதம் செய்து கொண்டிருந்த மாலயன் இருவருக்கிடையே அனல் பிழம்பாக பரமன் தோன்றியது புராணங்களில் கூறப்பட்டுள்ளது. அப்பொழுது அதன் அடிமுடி காண மாலயன் இருவரும் தம் தம் நிலை உணர்ந்து பரமனைப் போற்றிப் பணியவும் பரமன் தன் இயல் நிலையில் கருத்த நெஞ்சுடனும் சிவந்த மூன்றுவது கண்ணுடனும் தோன்றின வரலாற்றை கவி இங்கே வருணித்துள்ளார்.

**श्लाघ्यां दृष्टिं दुहितरि गिरेर्न्यस्य चापोर्ध्वको ट्यां**
**कृत्वा बाहुं त्रिपुरविजयानन्तरं ते स्थितस्य ।**
**मन्दाराणां मधुसुरभयो वृष्टयः पेतुरार्द्राः**
**स्वर्गोद्यानभ्रमरवनितादत्तदीर्घानुयाताः ॥ २० ॥**

**ஶ்லாக்⁴யாம் த்³ருஷ்டிம் து³ஹிதரி கி³ரேர்ன்யஸ்ய சாபோர்த்⁴வகோ ட்யாம்**
**க்ருத்வா பா³ஹும் த்ரிபுரவிஜயானந்தரம் தே ஸ்தி²தஸ்ய ।**
**மந்தா³ராணும் மது⁴ஸுரப⁴யோ வ்ருஷ்டயः பேதுரார்த்³ராः**
**ஸ்வர்கோ³த்³யானப்⁴ரமரவனிதாத³த்ததீ³ர்கா⁴னுயாதாः ॥ 20 ॥**

முப்புரங்களையும் வென்ற பின் மலைமகளை அன்புடன் நோக்கியும் வில்லியின் நுனியில் கையை வைத்துக்கொண்டும் நின்ற உம்மீது விண்ணுலக நந்தவனத்திலுள்ள பெண் தேனீக்களின் பெரும் கூட்டத்தினுல் தொடரப்பட்ட மந்தார மரங்களின் நறுமணம் கமழும் மலர்களின் மழை பொழிந்தது.

செயற்கரிய செயலைச் செய்து முடித்துப் பெருமிதமாக நின்ற பரமனின் மீது தேவலோக மலர்கள் பொழிவது இயற்கை தானே! அவ்விதம் நறுமணம் கமழும் மலர்களை மொய்க்கும் பெண் தேனீக்களும் மலர்களைப் பின் தொடர்ந்து வருவதில் வியப்பென்ன! அவ்விதமான காட்சியைத் தான் கவி இங்கே காண்கிறுர்.

அடுத்துவரும் இரு செய்யுட்களில் திருமாலிற்குப் பரமன் ஸுதர்சன் சக்கரம் அருளிய லீலா விநோதத்தை கவி வருணனை செய்கிறுர்.

**उद्धृत्यैकं नयनमरुणस्निग्धतारा परागं**
**पूर्णेऽदाद्यः परमसुलभे पुष्कराणां सहस्रे ।**
**चक्रं भेजे दहनजटिल दक्षिणं तस्य हस्तं**
**बालस्येव द्युतिवलयिंत मण्डलं भास्करस्य ॥ २१ ॥**

**உத்³த்⁴ருத்யைகம் நயனமருணஸ்னிக்³த⁴தாரா பராக³ம்**
**பூர்ணே(அ)தா³த்³யः பரமஸுலபே⁴ புஷ்கராணும் ஸஹஸ்ரே ।**
**சக்ரம் பே⁴ஜே த³ஹனஜடில த³க்ஷிணம் தஸ்ய ஹஸ்தம்**
**பா³லஸ்யேவ த்³யுதிவலயிந்த மண்ட³லம் பா⁴ஸ்கரஸ்ய ॥ 21 ॥**

எவர் ஆயிரம் தாமரை மலர்களும் ஆன பின்னர் மாசற்ற விழியின் மணியை மலரின் மகரந்தத் தூளாக உடைய சிவந்த விழியைப் பிடுங்கிக் கொடுத்தாரோ அந்த விழியானது அனல் பொழியும் உதிக்கும் சூரியனின் ஒளியினுல் சூழப்பட்ட வளையம் போலிருந்த ஸுதர்சன் சக்கரத்தை வலது கைக்கு அனுப்பியது போலும்.

ஆயிரத்தெட்டு மலர்களினுல் சிவனுரை வழிபட்டு திருமால் ஸுதர்சன் சக்கரம் பெற்ற புராண வரலாற்றை இங்கு கவி நிஜனவு கொள்கிருர். இதைப்பற்றி அடுத்த செய்யுளில் காண்க.

**विष्णुश्चक्रे करतलगते विष्टपानां त्रयाणां**
**दत्ताश्वासोदनुसुतशिरश्छेददीक्षां बबन्ध।**
**प्रत्यापन्नं तदपि नयनं पुण्डरीकानुकारि**
**श्लाघ्या भक्तिस्त्रिनयन भवत्यर्पिता किं न सूते॥ २२॥**

**விஷ்ணுஶ்சக்ரே கரதலக³தே விஷ்டபானும் த்ரயாணும்**
**த³த்தாஶ்வாஸோத³னுஸுதஶிரஶ்சே²த³தீ³க்ஷாம் ப³ப³ந்த⁴ ।**
**ப்ரத்யாபன்னம் தத³பி நயனம் புண்ட³ரீகானுகாரி**
**ஶ்லாக்⁴யா ப⁴க்திஸ்த்ரிநயன ப⁴வத்யர்பிதா கிம் ந ஸூதே ॥ 22 ॥**

முக்கண்ணே! ஸுதர்சன சக்கரம் கையை அடைந்ததுமே திருமாலானவர் மூவுலகிற்கும் தேறுதல் மொழிந்து அரக்கர்களின் தஜலயைக் கொய்ய உறுதி பூண்டார். அந்தக் கண்ணும் தாமரைக் கண்ணஜன மீண்டும் அடைந்தது. உம்மிடம் வைத்த போற்றத் தகுந்த பக்தியானது எதைத்தான் கொடுக்காது?

முந்தைய செய்யுளில் திருமால் செய்த அரும் பெருஞ் செயலான தம் தாமரைக் கண்ஜணப் பிடுங்கி பரமனடியில் ஸமர்ப்பணம் செய்ததைக் கூறி அதை மீண்டும் அவர் பெற்றதை இச் செய்யுளில் கூறுகிருர். பரமனிடம் பக்தி பூண்டவர் எதைத்தான் பெறமாட்டார்? யாவற்றையும் பெறுவார் அன்றோ?

திருமால் பரமஜனக் குறித்துத் தவம் இயற்றி ஆயிரம் மலர்கஜளக் கொண்டு வழிபட்டு வரும் பொழுது இன்னம் ஒரு மலர் எஞ்சியுள்ள பொழுது விஜளயாட்டாக அதைச் சிவனுர் மறைக்க, தியானத்திற்குப் பின் கண் திறந்த திருமால் மலரிஜனக் காணுது மனம் கலங்கி மலரையொத்த தன் கண் மலரையே பிடுங்கி ஸமர்ப்பணம் செய்ய அதனுல் மனம் மகிழ்ந்த சிவனுர் அவரது கண்ஜணயும் திரும்பக் கொடுத்து அருள் செய்தார் என்று லிங்க புராணம் கூறுகிறது.

**सव्ये शूलं त्रिशिखमपरे दोष्णि भिक्षाकपालं**
**सोमो मुग्धः शिरसि भुजगः कश्चिदंसोत्तरीयम्।**
**कोऽयं वेषस्त्रिनयन कुतो दृष्ट इत्यद्रिकन्या**
**प्रायेण त्वां हसति भगवन्प्रेम नियन्त्रितात्मा॥ २३॥**

**ஸவ்யே ஶூலம் த்ரிஶிக²மபரே தோ³ஷ்ணி பி⁴க்ஷாகபாலம்**
**ஸோமோ முக்³த⁴: ஶிரஸி பு⁴ஜக³: கஶ்வித³ம்ஸோத்தரீயம் ।**
**கோ(அ)யம் வேஷஸ்த்ரிநயன குதோ த்³ருஷ்ட இத்யத்³ரிகன்யா**
**ப்ராயேண த்வாம் ஹஸதி ப⁴க³வன்ப்ரேம நியந்த்ரிதாத்மா ॥ 23 ॥**

முக்கண்ணனே! உமது இடது கையில் திரிசூலம், வலது கையில் பிக்ஷா பாத்திரமான மண்டை ஓடு. தலையில் பிறைச்சந்திரன். மேலாடையாக அணிந்திருப்பதோ அரவம். இந்த வேடம் எவ்விதம் உங்களுக்குக் கிடைத்தது என்று இவ்விதம் ஓ பேறுடைத்தவனே! உம்மிடம் உள்ள அன்புப் பெருக்கால் உம்பால் ஈர்க்கப்பட்ட உள்ளம் கொண்ட மலைமகள் உம்மைக் கண்டு நகைக்கின்றாள்.

பரமனின் கோலம் மிகவும் வியக்கத்தக்கதே. இருப்பினும் அவர் பால் தம் மனம் ஈர்க்கப்பட்ட மலைமகள் அவரது வியக்கத்தக்க கோலத்தைக் கண்டு இவ்விதமாக பரிகாசம் செய்கின்றாள்.

**आर्द्रं नागाजिनमवयवग्रन्थिमद्बिभ्रदंसे**
**रूपं प्रावृड्घनरुचि महाभैरवं दर्शयित्वा ।**
**पश्यन् गौरीं भयचलकरां लम्बितस्कन्धहस्तां**
**मन्ये प्रीत्या द्रुत इव भवान्वज्रदेहोऽपि जातः ॥ २४ ॥**

**ஆர்த்³ரம் நாகா³ஜினமவயவக்³ரந்தி²மத்³பி⁴ப்⁴ரத³ம்ஸே**
**ரூபம் ப்ராவ்ருங்க⁴னருசி மஹாபை⁴ரவம் த³ர்ஶயித்வா ।**
**பஶ்யன் கௌ³ரீம் ப⁴யசலகராம் லம்பி³தஸ்கந்த⁴ஹஸ்தாம்**
**மன்யே ப்ரீத்யா த்³ருத இவ ப⁴வான்வஜ்ரதே³ஹோ(அ)பி ஜாத: ॥ 24 ॥**

குருதியுடன் கூடியதும் அவயவங்களில் முடியப் பெற்றிருப்பதுமான யானைத் தோலை தோளிலணிந்து மழைக்காலத்தில் தோன்றும் கருமையான மேகங்களைப் போல மிகவும் பயங்கரமான உம் உருவை காண்பித்ததும் அதைக் கண்டு பயந்து நடுங்கும் கைகளை உடைய பார்வதி உம்மைத்தழுவிக் கொள்ள அதைக்கண்ட நீர் வஜ்ரம் போல உடலைப் பெற்றிருந்தும் அன்பின் பெருக்கினால் இளகிவிட்டீர் போலும்.

யானைத் தோலைத் தரித்த சிவனாரின் உருவைக் கண்டு அஞ்சிய பார்வதி அவரைத் தழுவிக் கொண்டார். மலைமீது சஞ்சரிப்பவரும், மயானத்தில் வாசம் செய்பவரும், அச்சம் தரும் அணியும் ஆடையும் அணிந்தவருமான சிவனாரது வஜ்ரம் போன்ற தேகமும் அவளிடம் பரமனுக்கு உள்ள அன்பின் பெருக்கினால் இளகி திரவநிலை அடைந்தார் போலும் என்று கவி கற்பனை செய்கிறார். அவள் நிலை கண்டு பரமன் அவள் பால் பிரிவு கொள்கிறார் என்று பொருள்.

**व्यालाकल्पा विषमनयना विद्रुमाता प्रभासो**
**जायामिश्रा जटिलशिरसश्चन्द्ररेखावतंसाः ।**
**नित्यानन्दा नियतललिताः स्निग्धकल्माषकण्ठा**
**देवा रुद्रा धृतपरशवस्ते भविष्यन्ति भक्ताः ॥ २५ ॥**

**வ்யாலாகல்பா விஷமநயனா வித்$^{3}$ருமாதா ப்ரபா$^{4}$ஸோ**
**ஜாயாமிஸ்ரா ஜடிலஶிரஸஶ்சந்த்$^{3}$ரரேகா$^{2}$வதம்ஸா: ।**
**நித்யானந்தா$^{3}$ நியதலலிதா: ஸ்னிக்$^{3}$த$^{4}$கல்மாஷகண்டா$^{2}$**
**தே$^{3}$வா ருத்$^{3}$ரா த்$^{4}$ருதபரஶவஸ்தே ப$^{4}$விஷ்யந்தி ப$^{4}$க்தா: ॥ 25 ॥**

உம்முடைய பக்தர்கள் பாம்புகளை அணிகலன்களாகக் கொண்டவர்களாகவும், முக்கண் உடையவர்களாகவும், பவளங்களையும் தாமிரங்களையும் ஒத்த நிறம் உடைய வர்களாயும், தம் தம் மனைவிகளுடன் கூடியவர்களாயும், சடைமுடியுடன் கூடியவர்க ளாயும், பிறைச்சந்திரனுடன் கூடியவர்களாகவும், எப்பொழுதும் மகிழ்ச்சி உடையவர்க ளாயும், இயமம் நியமம் உடையவர்களாகவும், அழகியவர்களகவும், வெளிர் கருமை யான கழுத்தை உடையவர்களாகவும், விளையாட்டில் விருப்பமுள்ளவர்களாகவும், உருத்திரர்களாகவும், கோடரியைத் தாங்கிய வருமாக ஆகின்றனர்.

பரமனைப் பணியும் பக்தர்களும் அவரது உருவையே பெறுகின்றனர் என்று கூறப்படுகிறது. சிவனாரின் உடல் எப்பொழுதும் வெண்மையானது என்று கூறப்பட் டாலும் அவரது உமையொருபாக வடிவில் உமையின் நிறமான பவழங்கள் தாமிரம் இவைகளின் நிறமும் பக்தர்களிடமும் காணப்படுகின்றன. சிவனாரின் உருத்திர வடிவு ஆயிரக்கணக்கானது என்று கூறப்படுவதால் பக்தர்களும் உருத்திர என்ற சொல்லால் கூறத்தக்கவர்கள் ஆகின்றனர்.

**मन्त्राभ्यासो नियमविधयस्तीर्थयात्रा नुरोधो**
**ग्रामे भिक्षाचरणमुटजे बीजवृत्तिर्वने वा ।**
**इत्यायासे महति रमतामप्रगल्भः फलार्थी**
**स्मृत्यैवाहं तव चरणयोर्निर्वृतिं साधयामि ॥ २६ ॥**

**மந்த்ராப்$^{4}$யாஸோ நியமவித$^{4}$யஸ்தீர்த$^{2}$யாத்ரா நுரோதோ$^{4}$**
**க்$^{3}$ராமே பி$^{4}$க்ஷாசரணமுடஜே பீ$^{3}$ஜவ்ருத்திர்வனே வா ।**
**இத்யாயாஸே மஹதி ரமதாமப்ரக$^{3}$ல்ப$^{4}$: ப$^{2}$லார்தீ$^{2}$**
**ஸ்ம்ருத்யைவாஹம் தவ சரணயோர்நிவ்ருதிம் ஸாத$^{4}$யாமி ॥ 26 ॥**

பலனை விரும்பும் மூடர்கள் மந்திரங்களை ஜபித்தல், (க்ருச்ரம், சாந்திராயணம் போன்ற) நோன்புகளை நோற்றல், புண்ணிய தீர்த்தங்களுக்கு யாத்திரை செல்லுதல், கிராமத்தில் பிட்சை எடுத்தல், பர்ணசாலையிலோ அல்லது காட்டிலோ தானாக விளைந்த பயிர்களைக் கொண்டு உயிர் வாழ்வது என்று இவ்விதமான பெரும் பிரயாசையில் ஈடுபட்டுள்ளவர்களாக இருக்கட்டும். நானோவென்றால் உம்முடைய அடிகளின் நினைவாலேயே மோக்ஷத்தைப் பெறுவேன்.

எளிதான முறையை அறியாத மூடர்கள் தம் உடலை வருத்தும் கடினமான முறைகளான நோன்பும் நோற்றல், காசி, ராமேச்வரம் முதலான புண்ணிய ஸ்தலங் களுக்குச் செல்லுதல், காடுகளில் வசித்தோ அல்லது பர்ணசாலையில் வாழ்ந்து கொண்டோ தானே விளைந்த பயிர்களின் மூலம் உயிர் வாழ்ந்தோ இருக்கட்டும். அவர்கள் பரமனை அடைய எளிதான முறையை அறியாதவர்கள். நான் எப்பொழுதும் தங்கள் திருவடிகளை மனத்தில் நிறுத்தி வைத்தே மோக்ஷத்தை அடைவேன்.

**आस्तां तावत् स्वपनमुपरि क्षीरधाराप्रवाहैः**
**स्नेहाभ्यङ्गो भवनकरणं गन्धधूपार्पणं च ।**
**यस्ते कश्चित्किरति कुसुमान्युद्दिशन् पादपीठं**
**भूयो नैव भ्रमति जननीगर्भकारागृहेषु ॥ २७ ॥**

**ஆஸ்தாம் தாவத் ஸ்வபனமுபரி க்ஷீரதா⁴ராப்ரவாஹை:**
**ஸ்னேஹாப்⁴யங்கோ³ ப⁴வனகரணம் க³ந்த⁴தூ⁴பார்பணம் ச ।**
**யஸ்தே கஸ்சித்கிரதி குஸுமான்யுத்³தி³ஶன் பாத³பீட²ம்**
**பூ⁴யோ நைவ ப்⁴ரமதி ஜனனீக³ர்ப⁴காராக்³ருஹேஷு ॥ 27 ॥**

உம் தலையின் மீது பாலபிஷேகம், உடலில் எண்ணை முதலியவற்றால் அபிஷேகம், உங்களுக்காக ஆலயங்கள் கட்டுதல் சந்தனம், சாம்பிராணி மற்றும் இதர வழிபாட்டுப் பொருள்களை ஸமர்ப்பித்தல் முதலியன இருக்கட்டும். எவனொருவன் உங்கள் திருவடியைத் தாங்கும் பீடத்தின் மீது மலர்களைச் சாத்துகின்றானோ அந்த மானிடன் தாயின் வயிறெனும் சிறைச்சாலையில் மீண்டும் உழல்வதில்லை.

பரமனைக்குறித்து அவன் காலடியில் சாத்தும் மலர் வழிபாடொன்றே பிறப்பு இறப்பு என்னும் இந்த ஓயாத வாழ்க்கைச் சுழலைத் தடுத்து நிறுத்த மிகவும் எளிதான முறையாகும். வேறு வழிபாட்டு முறைகள் எதையும் தேடி அலைந்து அல்லல்பட வேண்டாம்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் சிவானந்தலஹரியில் தம் மனமாகிற மலரிருக்க வீணே பிற மலரினைத் தேடி குளம், குட்டை, காடு, மலை எல்லாம் அலையும்

மானிடரைப் பற்றிக் கூறும் 'கபீரே காஸாரே விசதி' என்னும் செய்யுளை ஒப்புநோக்குக.

**मुक्ताकारं मुनिभिरनिशं चेतसि ध्यायमानं**
**मुक्ताकारं शिरसि जटिले जाह्नवीमुद्वहन्तम् ।**
**नानाकारं नवशशिकलाशेखरं नागहारं**
**नारीमिश्र धृतनरशिरो माल्यमीशं नमामि ॥ २८ ॥**

**முக்தாகாரம் முனிபி⁴ரநிஶம் சேதஸி த்⁴யாயமானம்**
**முக்தாகாரம் ஶிரஸி ஜடிலே ஜாஹ்னவீமுத்³வஹந்தம் ।**
**நானாகாரம் நவஶஶிகலாஶேக²ரம் நாக³ஹாரம்**
**நாரீமிஶ்ர த்⁴ருதநரஶிரோ மால்யமீஶம் நமாமி ॥ 28 ॥**

அருவானவரும் அல்லது சுத்த சைதன்யமான வரும், முனிவர்களால் எப்பொழுதும் மனத்தில் தியானிக்கப்படுபவரும், முத்தைப்போன்ற வெண்மையானவரும், இந்தப் பிரபஞ்சமே உருவானவரும், பிறைச்சந்திரனைச் சூடியவரும், பாம்பை அணியாக உடையவரும், உமையையொரு பாகமாக உடையவரும், மண்டை ஓடுகளை மாலையாக அணிந்தவருமான ஸதாசிவனை வணங்குகின்றேன்.

சிவனாரின் பிரசித்தமான உருவை வருணித்து அதைக் கவி வணங்குகின்றார்.

**तिर्यग्योनौ त्रिदशनिलये मानुषे राक्षसे वा**
**यक्षावासे विषधरपुरे देव विद्याधरे वा ।**
**यस्मिन् कस्मिन् सुकृतनिलये जन्म निःश्रेयसाय**
**भूयाद्युष्मच्चरण - कमलध्यायिनी चित्तवृत्तिः ॥ २९ ॥**

**திர்யக்³யோனௌ த்ரித³ஶநிலயே மானுஷே ராக்ஷஸே வா**
**யக்ஷாவாஸே விஷத⁴ரபுரே தே³வ வித்³யாத⁴ரே வா ।**
**யஸ்மின் கஸ்மின் ஸுக்ருதநிலயே ஜன்ம நிःஶ்ரேயஸாய**
**பூ⁴யாத்³யுஷ்மச்சரண - கமலத்⁴யாயினீ சித்தவ்ருத்திः ॥ 29 ॥**

ஓ! தேவனே மோக்ஷத்திற்காக பறவை பூச்சிகளின் யோனீயிலோ, ஸ்வர்க்கத்திலோ, மனிதகுலத்திலோ, அரக்கர்கள் குலத்திலோ, யக்ஷர்கள் லோகத்திலோ, நாகலோகத்திலோ அல்லது கைலாயத்திலோ எங்காவது எனக்கு பிறப்பு இருக்கட்டும். உமது அடித் தாமரையை தியானம் செய்யும் மனோ நிலை இருக்கட்டும்.

மோக்ஷம் கிடைக்க எப்பிறவியாயினும் இருக்கட்டும். அந்த எப்பிறவியிலும் ஈசனின் அடித்தாமரையை எப்பொழுதும் இடையறுது நினைக்கும் மனுே நிலை இருக்கட்டும் என்று கோருகிறுர்.

**वन्दे रुद्रं वरदममलं दण्डिनं मुण्डधारं**
**दिव्यज्ञानं त्रिपुरदहनं शङ्करं शूलपाणिम् ।**
**तेजोराशिं त्रिभुवनगुरुं तीर्थमौलिं त्रिणेत्रं**
**कैलासस्थं धनपतिसखं पचितीनाथमीशम् ॥ ३० ॥**

**வந்தே³ ருத்³ரம் வரத³மமலம் த³ண்டி³னம் முண்ட³தா⁴ரம்**
**தி³வ்யஜ்ஞானம் த்ரிபுரத³ஹனம் ஶங்கரம் ஶூலபாணிம் ।**
**தேஜோராஶிம் த்ரிபு⁴வனகு³ரும் தீர்த²மௌலிம் த்ரிணேத்ரம்**
**கைலாஸஸ்த²ம் த⁴னபதிஸக²ம் பசிதீநாத²மீஶம் ॥ 30 ॥**

துயரைத் துடைப்பவரும், விரும்பும் பொருளைக் கொடுப்பவரும், வெண்மை நிறத்தவரும், கோலைப் பிடித்தவரும், மண்டை ஓட்டை அணிந்தவரும், மேம்பட்ட அறிவே உருவானவரும், முப்புரம் எரித்தவரும், சங்கரரும் (நன்மை பயப்பவரும்), திரிசூலம், ஏந்தியவரும், ஒளிமயமானவரும், மூவுலகிற்கும் கற்பிக்கும் குருவும், கங்கையைத் தரித்தவரும், முக்கண்ணரும் கைலாயத்தில் வசிப்பவரும், குபேரனுக்கு நண்பரும், பார்வதீமணாளனுமான பரமனை வணங்குகின்றேன்.

முன் செய்யுளில் கூறியது போல இச்செய்யுளிலும் பரமனின் பல்வேறு சிறப்பு குணங்களையும் கூறி பரமனைப் பணிகின்றுர் கவி.

**योगी भोगी विषभुगमृतः शस्त्रपाणिस्तपस्वी**
**शान्तः क्रूरः शमितविषयः शैलकन्यासहायः ।**
**भिक्षावृत्तिस्त्रिभुवनपतिः शुद्धिमानस्थिमाली**
**शक्यो ज्ञातुं कथमिव शिव त्वं विरुद्धस्वभावः ॥ ३१ ॥**

**யோகீ³ போ⁴கீ³ விஷபு⁴க³ம்ருதः ஶஸ்த்ரபாணிஸ்தபஸ்வீ**
**ஶாந்தः க்ரூரः ஶமிதவிஷயः ஶைலகந்யாஸஹாயः ।**
**பி⁴க்ஷாவ்ருத்திஸ்த்ரிபு⁴வனபதிः ஶுத்³தி⁴மானஸ்தி²மாலீ**
**ஶக்யோ ஜ்ஞாதும் கத²மிவ ஶிவ த்வம் விருத்³த⁴ஸ்வபா⁴வः ॥ 31 ॥**

சிவனே! நீர் பற்றற்றவரும், பற்றுடையவரும் ஆவீர். விஷத்தைக் குடிப்பவர் ஆனுலும் இறப்பற்றவர். கையில் ஆயுதம் ஏந்தியும் தவமியற்றுபவர். சாந்தமானவர். ஆயினும் கொடூரமானவர். போகப் பொருள்களைத் துறந்தவர். ஆயினும் மலை மகளு

டன் கூடியவர் பிச்சை எடுப்பவர். இருப்பினும் மூவுலகிற்கும் அதிபதி. மிகவும் தூய்மையானவர். இருப்பினும் எலும்பு மாலையை அணிந்தவர். இப்படி ஒன்றுக் கொன்று முரணுக உள்ள உம்முடைய தன்மையை எப்படி அறிய முடியும்?

ஒன்றுக் கொன்று முற்றிலும் முரணுன குணமுடைய பரமனின் தன்மையை அறிவது என்பது மிகவும் கடினமானதே.

**उपदिशति यदुच्चैर्ज्योतिराम्नायविद्या**
**परमपरमदूरं दूरमाद्यन्तशून्यम् ।**
**त्रिपुरजयिनि तस्मिन् देवदेवे निविष्टा**
**भगवति परिवर्त्तोन्माथिनी भक्तिरस्तु ॥ ३२ ॥**

**உபதி³ஶதி யது³ச்சைர்ஜ்யோதிராம்ஞயவித்³யா**
**பரமபரமதூ³ரம் தூ³ரமாத்³யந்தஶூன்யம் ।**
**த்ரிபுரஜயினி தஸ்மின் தே³வதே³வே நிவிஷ்டா**
**ப⁴க³வதி பரிவர்த்தோன்மாதி²னீ ப⁴க்திரஸ்து ॥ 32 ॥**

மிகப் பெரியதும், மிகச் சிறியதும், உள்ளிருப்பதும், பிரபஞ்சத்தின் வடிவானதும், துவக்கமும் முடிவும் அற்றதுமான் எந்த ஒளிமயமான வடிவைப் பற்றி வேதாந்தம் எடுத்துரைக்கின்றதோ அந்த முப்புரம் வென்றவனும் தேவாதி தேவனுமான பெரும் பேறுடைத்தவனிடம் பிறப்பிறப்பைக்களையும் பக்தி தழைத்திருக்கட்டும்.

பரமனின் வடிவதிசயத்தை விளக்கி அப்படிப்பட்ட பரமனிடம் ஸம்ஸாரமாகிற சக்கரத்தை அறவே களையும் பக்தி நிலைத்திருக்கக் கவி வேண்டுகின்றுர்.

'பரம், அபரம்' என்னும் சொற்களுக்கு பரப்ரஹ்ம ஸ்வரூபம், ஜீவஸ்வரூபம், என்றும் பொருள் கூறலாம்.

**इति विरचितमेतच्चारु चन्द्रार्धमौले :**
**ललितपदमुदारं दण्डिना पण्डितेन ।**
**स्तवनमवनका मेनात्मनोऽनामयाख्यं**
**भवति विगतरोगो जन्तुरेतज्जपेन ॥ ३३ ॥**

**இதி விரசிதமேதச்சாரு சந்த்³ரார்த⁴மௌலே :**
**லலிதபத³முதா³ரம் த³ண்டி³ஞ பண்டி³தேன ।**
**ஸ்தவனமவனகா மேஞத்மனே(அ)நாமயாக்²யம்**
**ப⁴வதி விக³தரோகோ³ ஜந்துரேதஞ்ஜபேன ॥ 33 ॥**

தன்னைக் காக்க விரும்பி தண்டி என்னும் பண்டிதரால் பிறைச்சந்திரனைத் தரித்தவனைக் குறித்து அழகிய சொற்கள் கொண்டதும் மிகச் சிறந்த பொருளை உடையதுமான 'அனாமயம்' என்பது துதி என்று இயற்றப்பட்டதை படிப்பதினால் மக்கள் தம் நோய் அகன்றவர் ஆவார்கள்.

இந்த துதி இயற்றியதன் காரணத்தையும், அதன் தன்மையையும் கவி இந்த செய்யுளில் கூறுகிறார்.

'ஆமயம்' என்னும் சொல்லிற்கு நோய் என்பது பொருள். 'அநாமயம்' என்றால் நோயின்மை என்று பொருள். பிறப்பு இறப்பு என்னும் ஸம்ஸார சக்கரம் ஒரு நோயென கூறப்படுவது வழக்கம். அந்த நோயைக் களையும் தன்மை கொண்ட இந்த துதி மிகவும் அழகிய சொற்களைக் கொண்டு உயர்ந்த பொருள் பொதிந்ததாக இயற்றப் பட்டுள்ளது.

[**உரை ஆசிரியர் குறிப்பு**: - இந்தத் துதியை இயற்றிய தண்டி கவி என்பவர் கி. மு. ஆறும் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் 'காவ்யாதர்சம்' என்னும் காப்பிய இலக்கண நூலை இயற்றியவருமான தண்டி என்பவரே என்பது 'சாரு, லலிதபதம், உதாரம்' என்ற மூன்று சொற்களை அவரது இத் துதியின் கடைசிச் செய்யுளில் கையாண்டதிலிருந்து தெரியவருகிறது.

முன் குறிப்பட்டபடி இத்துதி 'ஆமயம்' என்னும் இந்த பிறவிப்பிணியை போக்க வல்லது என்பதால் இதற்கு 'அநாமயஸ்தவம்' என்பது சாலப் பொருந்தும்.

இங்குள்ள 33 செய்யுட்களில் முதல் 31 செய்யுட்கள் 'மந்தாக்ராந்தா' என்னும் விருத்தத்திலும் கடைசி 2 செய்யுட்கள் 'மாலினி' விருத்தத்திலும் அமைக்கப் பெற்று ள்ளன.

சென்னை கீழ்க்கலை ஓலைச்சுவடி நிலைய அரையாண்டு ஆய்வு நூலில் அச்சிடப்பட்டுள்ள இத் துதியை பக்தர்கள் அனைவரும் பயன்பெற தமிழ் மொழி உரையுடன் கொடுத்துள்ளேன். இதைப் படித்து நாம் நமது பிறவிப்பயனைப் பெறுவோமாக.]

சிவம்.